10th August 1960]

SRI K. B. S. MANI: இந்த நெல் அரிசி, மற்றைய ஜில்லாக்களுக்கு அனுப்பப்படவில்லையென்று சொன்னால் இன்றைய தினம் 48 பட்டணம் படி கொண்ட ஒரு மூட்டை $47\frac{1}{2}$ ரூபாய்க்கு விற்கப்படுவதன் காரணம் என்ன? இது பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்யுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: வெளிநாடுகளுக்கு அனுப்புவதற்குத்தான் தடை. தென் ஸோனில் ஒரு மாநிலத்தி லிருந்து மற்றொரு மாநிலத்திற்குப் போகலாம். அந்த அளவிலே கொஞ்சம் நெல், அரிசி கேரளாவுக்குப் போயிருக்கிறது.

SRI A. VEDARATHNAM: கேரளாவுக்கு அனுப்பினாலும் வெளியே அனுப்புவதுதான். கேரளத்திற்கு எவ்வளவு அரிசி அனுப்பப்பட்டிருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU: கேரளத்திற்கு அனுப்பம்ப்பட்டிருக்கிற அரிசியின் அளவு 268,657 டன். ரயில் மூலமாக இரண்டு லட்சத்துச் சொச்சமும் ரோடு மூலமாக 67,614 டன்னும் அனுப்பப்பட்டிருக்கிறது.

*Madras State Police Officers' Conference*

* 66 *Q.*—SRI P. G. MANICKAM:
SRI V. K. KOTHANDARAMAN:
SRI S. M. ANNAMALAI:
} கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க் கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

உதக மண்டலத்திலே 1960-ம் வருஷம் மே மாதத்தில் நடைபெற்ற சென்னை ராஜ்ய போலீஸ் அதிகாரிகள் 4-வது மகாநாட்டிலே கலந்தாலோசிக்கப்பட்ட நடவடிக்கைகளின் விவரங்கள் யாவை?

THE HON. SRI C. SUBRAMANIAM: It will not be in public interest to disclose the details of the proceedings of that Conference.

*President, National Project Workers' Union, Kundah*

* 67 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state whether the President; National Project Workers' Union, Kundah, was arrested on 22nd April 1960 under the Preventive Detention Act?

THE HON. SRI C. SUBRAMANIAM: No, Sir.

SRI N. K. PALANISAMI: இந்த குந்தா எலெக்ட்ரிசிடி ஓர்க்கர்ஸ் காரியதரிசியை 151-வது செக்ஷன் பிரகாரம் "வாரண்ட்" இல்லாமல் அடைத்து வைக்க வேண்டிய காரணம் என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: அவர் செய்த காரியங்களுக்காகவும், செய்ய இருந்த காரியங்களுக்காகவும் 151-வது செக்ஷன் பிரகாரம் அரஸ்ட் செய்திருக்கிறார்கள். தவறுதலாக அரெஸ்ட் செய்திருந்தால் கோர்ட்டுக்குப் போய் நிவாரணம் பெற சட்டத்தில் இடமிருக்கிறது.

*Crop Competitions*

*68 *Q.*—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the maximum yield per acre secured by agriculturists in the District Crop Competitions of last year conducted by the Government through Agricultural department or the Community Project department;

(*b*) the maximum yield per acre in each of the seed farms of our State; and

(*c*) the steps taken to increase the yield in the seed farms?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) & (*b*): A paper[a] is placed on the table of the House.

(*c*) Provision of adequate irrigation facilities and application of appropriate doses of manures and fertilisers in economic quantities and adoption of improved methods and plant protection measures.

SRI K. RAMACHANDRAN: In the statement placed on the table of the House, Tirunelveli has recorded production of 8,300 lb. It seems to me to be high. May I know what are the methods adopted in that district for having such increased production and if so, will such methods be recommended to other districts also?

THE HON. SRI M. A. MANICKAVELU: More or less same methods are adopted in all districts but the extra production might be due to richness of the soil or timely wetting of the crop and other factors.

SRI S. LAZAR: இந்தக் குறிப்பில் இருந்து தெரிந்து கொள்ளக் கூடியது தனியார் விவசாயப் பண்ணைகளில் 8,000 ராத்தலும், சர்க்காருடைய பண்ணைகளில் 2,000 ராத்தலும் என்ற அளவில் இருக்கிறது. சர்க்கார் பண்ணைகளில் ஏறக்குறைய 4-ல் ஒரு பங்குதான். இவ்வளவு வித்தியாசம் இருப்பதற்குக் காரணம் என்ன? பொது மக்கள் அரசாங்கப் பண்ணைகளை மாதிரிப் பண்ணைகளாக வைத்து முன்னேறவேண்டுமென்று சொன்னால் இவைகளைத் திருத்தியமைத்து நல்ல முறையில் சாகுபடி செய்ய முயற்சி எடுத்துக் கொள்ளப்படுமா?

---

[a] Printed as appendix on pages 368 and 369 infra.